உ

ஸ்ரீ ராமஜெயம்

# சடகோபர் சதகத் தந்தாதி


ஆசிரியர் :

மகான் - வண்ணச்சரபம்,

அருண்மிகு. தண்டபாணி சுவாமிகள்

திருவாமாத்தூர்


இடைப்பாளையம்

## திரு. S. ரங்கசாமி நாயுடு அவர்கள்

## நினைவு மலர்

1963

உ

ஸ்ரீராமஜெயம்

# சடகோபர் சதகத் தந்தாதி


ஆசிரியர் :

மகான்-வண்ணச்சரபம்
திருப்புகழ்ச் சுவாமிகள், முருகதாச சுவாமிகள்
என வழங்கும்

## அருண்மிகு. தண்டபாணி சுவாமிகள்



திருவாமாத்தூர் - கௌமார சபை வெளியீடு.

பதிப்பாளர் :

வழக்கறிஞர் திரு. ர. திருமலைசாமி நாயுடு அவர்கள்
இடைப்பாளையம்.

1963] [விலை 50 புதுக்காசுகள்

உ

ஸ்ரீ ராமஜெயம்

# சடகோபர் சதகத் தந்தாதி

ஆசிரியர் :

மகான் - வண்ணச்சரபம்,
திருப்புகழ்ச் சுவாமிகள், முருகதாச சுவாமிகள்
என வழங்கும்

அருண்மிகு. தண்டபாணி சுவாமிகள்
திருவாமாத்தூர்

இடைப்பாளையம்

திரு. S. ரங்கசாமி நாயுடு அவர்கள்

## நினைவு மலர்

1963

உ

ஸ்ரீராமஜெயம்



திரு. S. ரங்கசாமி நாயுடு அவர்கள்

இடைப்பாளையம்.

தோற்றம்: 1875

மறைவு: 1962

குருவே துணை

# முன்னுரை

அங்காழி மாநகர்ப் பொய்கை யருகில் அழுதவனுற்
பொங்காழி நஞ்சம் புசித்தோன் அளவில் புகழ்புனைந்தான்
செங்கா ழிலங்கு புளிநீழற் பாவலன் செய்துதியாற்
சங்காழி அங்கைத் திருமால் சமயம் தழைத்ததுவே.

—தண்டபாணி சுவாமிகள். தனிக்கவி.

"சடகோபர் சதகத் தந்தாதி" என்னும் இந்நூற் பெயரானது, குருகூர் ஸ்ரீநம்மாழ்வார் என்று வழங்கும் சடகோபாழ்வாரது அரும்பெரும் இயல்புகளைத் தொகுத்து, அந்தாதித் தொடராய் நூறு பாடல்களில் செய்யப் பெற்ற பனுவல் என்னும் பொருள் தந்து நின்றது. ஆறன் உருபடியாகப் பிறந்த அன்மொழித் தொகையுமாம்.

நம்மாழ்வார், கருணையால் அருளிச் செய்யப்பட்ட "திருவாய்மொழி" என்னும் தமிழ் வேதத்தை, ஆயிரம் கவிகளில் அந்தாதியாகப் பத்துப் பாடல்களுக்கு ஒருமுறை தமது பெயரை அமைத்துத் திருக்கடைக் காப்பு ஒவ்வொரு கவியாக இயற்றியதுபோல, இந்நூலும் இயற்றப்பட்டிருக்கிறது.

"உயர்வற உயர்நலம் உடையவன் எவன்அவன்
மயர்வற மதிநலம் உடையவன் எவன்அவன்
அயர்வறும் அமரர்கள் அதிபதி எவன்அவன்
துயரறு சுடரடி தொழுதெழல் மனனே.

இஃது, சடகோபராழ்வார் அருளிய திருவாய்மொழியின் முதற்பாடல். இந்நூலாசிரிய சுவாமிகள், ஸ்ரீரங்கநாதன் மீது பாடப்பெற்ற திருவரங்கத் திருவாயிரம் என்னும் ஆயிரங்கவிகளையுடைய நூலில்,

"உலகுகள் முழுமையும் உதவுனன் எவன், நுவல்
அலகறும் உயிர்களும் அருளினன் எவன், இருள்
மலமுறும் அலைகெட மலையவன் எவன், அவன்
நலமலி திருவருள் நமைமிக விழைவதே"

என அமைந்திருக்கின்றனர். இதனால் நம்மாழ்வார் மீது இவர் கொண்டுள்ள அன்புத்திறம் வெளிப்படத் தெரிகிறது. ஏனெனில், இவர், இளமை முதலாகவே, முருகப் பெருமானை முதற் பொருளாகக் கொண்டு உபாசனை தொடங்கி, வேலாயுதப் பூசையைச் செய்து வந்தனர். அக்கால் வைணவ சமயத்தை வேற்று மனப்பான்மையுடன் கருதிப் பற்றற்றிருந்தனர். அந்நிலையில் திருவாய்மொழியைக் கருத்திற்கொண்டு படித்துணர்ந்தனர். அதனால் தன் தெய்வமொன்றே உயர்வு, ஏனையவை அப்படியன்றென்று கருதும் பேதநிலை நீங்கிச் சமயம் யாவும் கடவுள் ஒன்றிற்கே உரியதென்ற சமரச நிலையுற்றனர். இக்கருத்தை, இவரது வரலாற்று நூலான குருபரதத்துவ நூலில் விட்டுணு தெரிசனச் சருக்கத்திற் கூறுகின்றார்.

"விண்டு நாடணைக் கொடியரில் ஒருவனு
விளங்கிய எனை, அன்றேன்
பண்டு செய்தவப் பயன்கொடோ அல்லது
பழுதில்தண் அருளாலோ
தொண்டு செய்பவர் அடியவர்க் காளெனும்
துணிவுடைக் குருகூரான்
கண்டு கூறிய தமிழ்மறைப் பயன்கொடு
களிப்புறப் புரிந்தானே." என்கிறார்.

அதன்பின் தமது முருகன், உபாசனைக் காட்சியிற் செய்தருளிய பல அநுபூதிகளையும் கொண்டு, அகண்ட பரமான பொருள் ஒன்றே என்றும் அன்பர் உபாசனைக் கேற்ப அது பல வடிவு கொள்ளும் என்றும் அறிந்து, சௌரம், சைவம், சாத்தேயம், வைணவம், காணுபத்தியம், கௌமாரம், என்ற அறுவகைச் சமயங்கட்கும், சமயாதீத

மான பொதுப்பொருளுக்குமாகப் பலவகைத்துதி நூல்கள் பாடினர். அவற்றுள், திருமால் சமயப் பகுதியில், திருவரங்கத் திருவாயிரம் ஒன்று. ஏழாயிரப் பிரபந்தமென்ற பெரு நூலில் திருமாலைப் பற்றிய பாடல் ஆயிரம். அதுவன்றி, திருவனந்தபுரம் பதுநாபப்பெருமாள்மீது யமக அந்தாதி, அரியேக பாதத்தந்தாதி, அரங்கத்து இதழகல் (நீரோட்ட) அந்தாதி, வேறுபல பதிகங்கள் இயற்றியிருக்கின்றனர். இது போல் ஒவ்வொரு சமயங்களுக்கும் பல பாடல்கள் உள்ளன.

தனது சமரச அநுபவத்துக் கேற்ப, முழுநீறு பூசி, வலது தோளில் தென்கலை, இடதோளில் வடகலை நாமமும், துளசி, உருத்திராக்கம், தாமரை இவற்றின் மணிகளாலாய மாலையணிந்து சிலகாலமிருந்தனர். அக்கால் திருமால் இவரது நிட்டையில் விளங்கி இவ்விரு கலைகளும் ஏற்படு முன் இருந்த கோபியையும் சேர்த்தணிக என்றருளினர். அதன்படி நெற்றியில் கோபியைப் பூண்டு குங்குமப் பொட்டுடன் விளங்கினர் என்ப.

" சிறிது நாள்பொது வேடமிட் டுலவினேன் ;
அவற்றினுள் திருநாமக்
குறியி ரண்டுமென் தோள்களிற் பொலிந்தன. என்றும்

பின்னர் நாட்சில போய்நெடு மால்எனுட்
பிறங்கி, இப் பிரிவுண்டாம்
முன்னம் உள்ளவா றெற்றியிற் றரிஎன
மொழிந்தனன். என்றும்

தமது வரலாற்று நூலாகிய குருபரதத்துவ நூலில் விட்டுணு தெரிசனச் சருக்கத்திற் கூறுகின்றார்.

இது போற் பல அநுபவங்களை இவரது வரலாற்றுல் அறியலாம். தமிழ்ப் புலமையுடன் அருளாடலும் தோய்ந்த புலவர்களைத் தொகுத்துக் கூறிய புலவர் புராணம் என்னும் நூலில், சடகோபாழ்வார் சருக்கம் முதலாவதாகக் கூறியிருக்கின்றார். அவரைப் பற்றித் தம் கருத்தைத் தெளிவு

பட எடுத்துக் கூறுவது காண்க. ஒருநாள் திருமால் பாகவதர் வடிவில் ஆழ்வார்முன் சேவை வழங்கி, மகிழ மாலையைச் சூட்டினர். எமது திருமால்வைகும் பரமபதத்துக்கு வருக என்றனர். அதற்கு ஆழ்வார்கூறும் பதிலாவது,

"வைகுந்தம் அன்றிஒரு வயினறியேன் ; வான்பரமும்
பொய்குன்று மாயையுமாம் பூரணன்மால் எனத்தேர்ந்தேன்
மெய்குன்றப் பகர்ந்தனையே வேருனீ எனலும், அவன்
உய்கும்பல் உன்னுயர்ச்சி உணர்வுறச்செய் தேன்என்றான்."

என்று கூறியிருக்கின்றனர். மேலும் ஆழ்வார் தோற்றத்தைக் கண்டவர்கள், தம் தம் கருத்தை விளக்குவதும் இவர் தன் கருத்துக் கூறுவதும் அறிக.

"கண்டபேர்சிலர் அவனிவன் என்றனர் ;
காமனென்றனர் சில்லோர்
புண்டரீகனென்றனர் சிலர், மாலெனப்
புகன்றனர் சிலர், ஆற்கீழ்த்
தொண்டர்சூழ் குருஎன்றனர் சிலர், சிலர்
தோகை வாகனன்என்றார்
விண்டபேரும் மற்றையரும் ஈங்கிவன் ; என
விழைந்தனர்சிலர் மாதோ.

முன்னி னைப்பவர் இடர்கெடுத் தலிற்கரி,
மொய்த்தொடை யலில்மாரன்
பன்னி டும்சொலில் பிரமன், வாழ் தலத்தினில்மால்
பழுதில்கைக் குறிதன்னால்
வன்னி நேத்திரச் சிவன், பிறந் திட்டநாள்
வாய்ப்பினில் வடிவேலோன்,
என்னி யற்கைகொள் குழந்தைமா முனிவன்எற்
குயர்வுமாம் குரவோனே."

உபாசிப்போரது எண்ணப்படி யெல்லாம் விளங்கும் ஆசாரிய வடிவமே எனக்கு நம்மாழ்வார் ஆவர் என்று கூறிய உண்மைக் கருத்து தெற்றெனத் தெரிகிறது. மேலும், திருமால் சம்பந்தப்பட்ட துதிநூல்களில் இவரைப்பற்றிக் கூறுமலிரார். அவற்றுட் சில காண்க.

"பாண்டிநன் னூட்டிலவிர் குருகைமா முனிவனிகர்
பத்தர்பெறு மெய்ஞ்ஞானமும்" என்றும்

"சடகோபன் முதலினர்க் கருளிய பெருஞ்சேவை
தனையெனக் கென்றருளுவாய்" என்றும்

"தென்கவிச் சடகோபன் மொழியும்சுவை போலுமோ."

என்றும் கூறியுள்ளார்.

ஒரு நாள் இவர் பெற்ற சேவையொன்றில் பெருமாள், சயனக் கோலத்திலிருக்க இருதேவியர் பாதம் வருடிக் கொண்டிருப்பதைக் கண்டு, அருகிற் சென்று பிராட்டியாரை நோக்கி, "உலகிற்பசுக்களெல்லாம் மழையால் நனையா வண்ணம் மலையைத் தூக்கியும் அன்று காத்த பெருமாள், இன்று உணவுக்காக அவை மக்களால் கொல்லப்பட்டு மாய்கின்றனவே அவைகளைப் பாதுகாக்க எண்ணுமல் நீண்ட காலமாக உறங்குகின்றுரே, எப்போது கண்விழிப்பார்?" எனக்கேட்டனர். தாயார் "எழுந்து விடுவார், சமயந் தான்" எனப் பதில் கூறினள். அருகிற் கைகுவித்து வணங்கிநின்ற சடகோபர், தலையசைத்து, "ஆமாம்" என்று அம்மொழியை ஆமோதித்துக் கூறியது கண்டனர். இக் கருத்தை, திருமகளந்தாதியிற்கூறி, இவ்வளவு காலமாகியும் துயில் எழக்காணுமே, ஆழ்வார் சொல்லும் பலிதமெய்த வில்லையே என்றேங்கியவராய் ஆழ்வாரும் ஏன் ஒத்துக் கூறினர்? என்று திருமகளையே வினவுகின்றுர்.

"மெய்யனல் லேன்தவ னல்லேன் சரத விரதனல்லேன்
பையர விற்றுயில் கூர்பெரு மான்எழும் பான்மைசொற்றுய்
ஐயமில் சீர்ச்சட கோபனும் ஆங்குரைத் தான்:கண்டிலேன்
உய்யஎன் றுண்டருள் வாய்பது மாதனத்(து) உத்தமியே."

திருமகளந்தாதி, 40-வது கவி.

இதுபோன்று ஆழ்வார்மீது கொண்ட அன்பின் விளைவாகத் தோன்றியதே இவ்வரிய நூலாகும். இந்நூலில் பல, பொருள் செறிந்த கவிகள் இருப்பினும் விரிவஞ்சி இந் நூலினைப் பாடும் காரணம்பற்றிய செய்தியைக் கூறுவது போன்றுள்ள ஓர் பாடலை மட்டும் எடுத்துக்காட்டுகிறேன்.

குருகைநாதன்முன், கோதறும்அன்பு மேற்கொடுதன்
அருகுவந்தொருபதுகவி யுரைத்தவற்(கு) அலர்மின்
மருவுமார்பினன் ஆயிரங்கவி கொடுவழங்கும்
பெருமையீந்தனன் கருணையிற் பெரியவர்யாரே.

24-வது பாடல்.

குருகை நாதராகிய சடகோபாழ்வார் முன்பு, அன்பு மிகுதி கொண்ட மதுரகவியாழ்வார் ஒருபத்துப் பாட்டு (கண்ணிநுண் சிறுத்தாம்பு) பாடியதற்காக, ஆழ்வார் திருமால்மீது ஆயிரம் பாட்டுப்பாடித் தாம்பெற்ற திருவருளை வழங்கினர். ஆயிரம் பாட்டுப்பாடிச் சடகோபர் பெற்ற திருமாலருளை, பத்துப்பாட்டைச் சடகோபர்மீதுபாடி மதுரகவியாழ்வார் எளிதிற் பெற்ருர். ஆகவே திருமால் கருணையினும் சடகோபாழ்வார் கருணை சிறந்ததென்ற நயம் அறிக.

ஆகவே, பத்துப்பாட்டுப்பாடி மதுரகவியாழ்வார்பெற்ற அருளை நினைத்து நூறுபாட்டு பாடுகின்ற எனக்கு நம்மாழ்வார் என்னதருவோரோ என்ற கருத்து உள்ளுறையாயிருக்கின்றது காண்க.

இத்தகைய அரியநூலைப்பதிக்க முன்வந்தவர்—சென்னை உயர்நீதிமன்ற வழக்கறிஞர் அன்புக்குரிய திரு. ர. திருமலைசாமி நாயுடு அவர்களாவர். தமது தந்தையான திருவாளர் ரங்கசாமி நாயுடு அவர்கள், சீரிய ஒழுக்கமும், திருமாலன்பும், நாலாயிரப் பிரபந்தப் பாடல்களிற் பலவற்றை மனனம் செய்து போற்றும்பண்புடையவர். தமது பதியான விழுப்புரத்தை அடுத்த இடைப்பாளையத்தில் உள்ள பசனை மடத்தில் இருந்து பாடியும், பலரிடம் அன்புடன் பேசியும் மகிழ்பவர். இந்நூலாசிரியரான தவத்திரு. தண்டபாணி சுவாமிகளிடம் பேரன்பு பூண்டு திருவாமாத்தூருக்கு அடுத்து வரும் போதெல்லாம் கண்டு பேசி அன்பு கொண்டவர். ஆடம்பரமற்ற தூய வாழ்வினர். அவரது நினைவாக, அவர் தண்டபாணி சுவாமிகளிடம் கொண்டிருந்த அன்புக்கு எடுத்துக்

காட்டாக இந்நூலைப் பதிப்பித்து தந்தையாருக்கும், தமிழுக்கும் தாம் செய்யும் பணியாக வெளியிட்டுப் புண்ணியமும் புகழுங்கொள்கிறார் திரு. ர. திருமலைசாமி நாயுடு அவர்கள்.

தவத்திரு. நூலாசிரியராகிய தண்டபாணி சுவாமிகள் திருநெல்வேலியில், சைவவேளாண் மரபில் 1839-ம் ஆண்டில் தோன்றியவர். பலதல சேவை செய்து சீவ கருணை நெறியை வளர்த்து இறுதியில் திருவாமாத்தூரில் ஒன்பதாண்டுகள்வரை தங்கித் தவம்புரிந்து 1898-ல் திருவருட்பேற்றை எய்தினர். அவர் செய்தருளிய பாடற்றொகுதியிலிருந்து எடுத்து இந்நூல் வெளியிடப் பெறுகிறது. பதிப்பவரும், இந்நூற்பாடலைப் படித்துத் துதிப்பவரும் எல்லா நலங்களையும் பெற, எல்லாம்வல்ல திருமாலருளை வணங்கி வாழ்த்துகிறேன். நலம்.

தெய்வமே துணை.

இன்னணம்
நூலாசிரியர் பெயரர்,
தி. செ. முருகதாச ஐயா
கௌமார மடாலயம், திருவாமாத்தூர்.

விழுப்புரம் P.O.
11—10—1963.

# பதிப்புப்பாயிரம்

எண்சீர் விருத்தம்

திருமலைசா மிப்பெயர்கொண் டவிரும்நண்பன், அன்பு
செறிந்ததந்தை யாரரங்க சாமியண்ணல், சீலம்
மருவுதண்ட பாணியெனு மாதவன்பாற் கொண்ட
வண்மையுணர்ந் தப்பெரியன் வழுத்துபல நூலுள்
பொருவில்சட கோபர்சத கத்தா திப்பேர்
பொருந்துமிதை யச்சிட்டுப் போற்றுதந்தை நினைவாய்ப்
பெருமையுற வெளியிட்டுப் பத்தர்பெற வுதவிப்
புண்ணியமும் பொருட்பயனும் புகழும்உற்றார் உயர்வே.

வெண்பா

வெம்மாயை யற்று விளங்கும் சடகோபப்
பெம்மான் தனதுபுகழ்ப் பேசுமிநூல்-எம்மானும்
தண்டபா ணிக்குரவன் சாற்றினன் ; கற்றுணர்வார்
மண்டலத்தில் வாழ்வர் மகிழ்ந்து.

திருவாமாத்தூர்
விழுப்புரம் P.O.
17—10—63.

தி. மு. சங்கரலிங்கம்,
தமிழாசிரியர்,
கௌமார மடாலயம்.



அருண்மிகு. தண்டபாணி சுவாமிகள்

ஸ்ரீமத் நாராயணாய நம:

# சடகோபர் சதகத்தந்தாதி

காப்பு வெண்பா

பம்பு புனற்பொருநைப் பாற்புளிக்கீழ் வீற்றிருப்பான்
அம்புயத்தாட் காம்சதகத் தந்தாதி — செம்புனிதத்
தண்டமிழாற் சொல்லநல்கும் சங்காழிக் கைப்பெருமான்
தொண்டர்திருப் பாதத் துகள்.

## நூல்

கொச்சகக் கலிப்பா

தண்பதுமப் பூம்பொகுட்டிற் சதுமுகனை ஈன்றருளும்
பெண்பெருமாள் வாழுரத்தெம் பெரியபெரு மாளருளால்
விண்பதியும் மண்பதியும் வெறுத்து முத்தி வீடெய்த
வண்புளிக்கீழ் வீற்றிருந்த மாறனிரு தாட்டுணையே. 1

தாடாண்மைச் சங்காழித் தடங்கரத்தெம் பெருமானைக்
கோடாத மனமலரிற் குடியிருத்திக் கொண்டாருள்
பீடாரும் சடகோபப் பெருமானெற் பிறப்(பு) இறப்பு
நாடாது புரந்துண்மை ஞானம்நல்கும் நற்றுணையே. 2

நற்றவச்சீர் அறிகில்லேன் நானிலத்தில் ஏடணையாம்
பற்றறுக்கும் வலியில்லேன் பரமபதப் பெருமானை
உற்றவன்றன் அடியாரோ(டு) உறவாடச் செய்வதற்குக்
குற்றமிலார் புகழ்குருகைக் குழந்தைமுனி பதந்துணையே. 3

பதமனந்தத் தினும்மேலாம் பரமபதம் இத்தகைத்தென்(று)
இதமகிதம் அறியேனும் எளிதுணர்ந்து கொள்வதற்குச்
சதமகனும் நான்முகனும் சங்கரனும் தாழ்ந்திறைஞ்சும்
முதல்வனைப்போற் றியகுருகை முனிதிருவாய் மொழிதுணையே.

மொழிவரும்பே ரானந்த முத்தியிற்போ வதன்முன்னம்
இழிதொழிற்பாழ் மதத்தோர்தம் ஈடழிக்க வேண்டுமெனுள்
விழிமலர்க்கார் முகில்போல்வான் மெய்யருளை விளக்குதற்குப்
பொழில்மலிசீர்த் தென்குருகைப் புலவனது புகழ்துணையே. 5

புகழ்விரும்பிப் பலவாறு புண்படும்இப் பொல்லேனை
அகழ்கடற்பா ருலகோரும் அண்டர்களும் கண்டுவப்பத்
திகழ்தருசீர் நல்குதற்குத் தென்குருகை வன்புளிக்கீழ்
நிகழ்வகுளா பரணத்தான் நின்றபெரு நெறிதுணையே. 6

நெறிகளொவ்வா மாற்றங்கள் நிகழ்த்திடினும் நீலவிழிப்
பொறியிருந்த மார்பனையே போற்றலெனத் தேற்றுதற்குச்
செறிபொழிற்றென் குருகூரிற் சின்மயமுத் திரைக்கையோ(டு)
அறிவறிந்தோர்க்(கு) ஆதரமாய் அவிர்கின்றான் அருள்துணையே. 7

அருள்பெருகிக் கானகத்தில் ஆனையொன்றை அன்றளித்த
பொருள்நிலையம் நன்குணர்ந்து போற்றுமிச்சைப் புலவோர்க்குத்
தெருள்நிலைச்செந் தமிழ்ப்பாண்டித் திருக்குருகைப் புளிக்கீழுற்(று)
இருளறுக்கும் மாமுனிவன் எடுத்தவலக் கைதுணையே. 8

கைத்துமிகும் ஆணவத்தாற் காதலனைத் துயர்செய்தான்
செத்துலகம் ஈடேறச் செய்யஒரு தூணில்வந்தான்
தத்துவம்என் றோர்வதற்குச் சடகோபன் தாமரைத்தாள்
வைத்துருகும் நெஞ்சகத்து மாதவர்தாள் மலர்துணையே. 9

மலர்மகளை நெஞ்சகத்தில் வைத்தானை மனத்தகத்தில்
நிலவவைத்த நம்மாழ்வார் நிலையிதெனத் தேர்வதற்குப்
பலபலபல் கோடிசென்மம் பசுந்துளவால் அருச்சித்துச்
சலனமற எட்டெழுத்தும் சாற்றியதோர் தவந்துணையே. 10

தவமுடித்தோர்க் கரசாய சடகோபன் தாள்கருதி
அவலமறும் உணர்வெய்தும் அரியதிருப் புகழ்க்காரன்
நுவலுமிந்தப் பனுவற்பா நூற்றுள்இவை ஒருபத்தும்
சிவனயன்ஆ தியர்போற்றும் திருப்பதத்திற் சேர்ப்பனவே. 11

*கலித்தாழிசை*

சேர லார்பெரும் சீரழி யப்பொரும்
போர வாவுமென் புண்ணற நாடுவாய்!
சீர னேகந் திகழ்தரு தென்குரு (கு)
ஊர னேயருள் ஓங்கும்ஓய் யாரனே. 12

ஆர ணத்தை அருந்தமிழ் செய்குரு(கு)
ஊர னேநின் உளத்தவி (சு) ஓவுரு
நார ணன்றனே நாடுமென் நல்குர(வு)
ஆர வாரம் அழிந்திடச் செய்திடே. 13

செய்ய மேனித் திருமகள் வாழுரத்(து)
ஐயன் வௌவும் அணிக்குரு கூரநான்
பொய்யர் அஞ்சும் புகழ்பெறச் செய்யில்இவ்
வைய வாணர் மனத்துயர் மாறுமே. 14

மாறி லாத மணிநிறத் தண்ணல்வாய்
கூறி டுஞ்சொற் குறித்தும் அயர்ந்துளேன்
தேறி டும்படி செய்குதி செய்யசீர்
வீறி டும்குரு கைத்தமிழ் வேதனே. 15

வேத னைத்தரும் மென்மலர் உந்தியான்
பாத மேமிகப் பற்றிய பற்றுளேன்
ஏதம் எய்தி இடைந்திடல் என்கொலோ
போத ஞானப் புளிக்குரு கூரனே. 16

கூர வாளிற் கொடியகண் மாதரார்
வாரம் எய்தி மயங்கி வருந்துவேன்
நார ணன்பதம் நண்ணுவ(து) எற்றையோ
சார மிக்க தமிழ்ச்சட கோபனே. 17

கோப வாரி குளித்தயர் கொள்கையேன்
தாப மற்ற தலம்பெற லுள்ளதோ
பாப நாசப் பசுமுகில் அன்னமால்
சாப அம்பிற் றமிழ்பொழி மாறனே. 18

பொழிம தப்பெரும் பூட்கைஅன் றேலிடும்
உழிய டைந்தருள் உத்தமன் நாயினேன்
கழிய ழைத்துங் கருணைசெய் யாததேன்
அழிவில் தென்குரு கூரமர் ஐயனே. 19

ஐய மின்றி அறைந்தஅக் காண்முனே
உய்யத் தூணில் உதித்தவன் ஓதநீர்
வையம் வாழஎன் மாட்டொளி ராததேன்
செய்ய சீர்க்குரு கூர்த்தமிழ்ச் சித்தனே. 20

சித்தி நாடித் தியக்குறு சிந்தையேன்
முத்தி வேண்டும் முறையுணர் வேன்கொலோ
நத்தி வேதம் நறுந்தமி ழாகச்செய்
சத்தி யாழ்வார் சதங்கைப் பதங்களே. 21

களவில் சிந்தைக் கவின்சட கோபனை
அளவி ளாவி அமைவனத் தான்சொல்நூற்(று)
உளன வாமிவ் வொருபது பாடலும்
துளவ மாயன்மெய்த் தொண்டரிற் கூட்டுமே. 22

கலிவிருத்தம்

கூட்டு சொற்சுவை உணர்கிலாக் கோரணிப் புலவர்
பாட்டும் வேண்டும்நம் பகவனென் பசுந்தமிழ்ப் பனுவல்
கேட்டும் இன்புறக் கிருபைசெய் யாவிதம் கிளத்தாய்!
கோட்டு வாரணம் பிளிறிய குருகைவாழ் குருவே. 23

குருகை நாதன்முன் கோதறும் அன்புமேற் கொடுதன்
அருகு வந்தொரு பதுகவி உரைத்தவற்(கு) அலர்மின்
மருவு மார்பினன் ஆயிரங் கவிகொடு வழங்கும்
பெருமை மீந்தனன் கருணையிற் பெரியவர் எவரே. 24

எவள வோபெரி யவர்புகழ் கேட்டுளம் இகத்தில்,
தவள வாள்நகைத் தாய்முலை அமுதமும் தணந்து
புவனி வாழ்வயிற் றுன்அருட் புசித்தவா புளிக்கீழ்த்
தவழு வான் அல(து) இன்றிது சரதம் மானிடரே. 25

மானி டத்தினன் மலரயன் முதற்சொல்வா னேரும்
நானி லத்துயிர் களும்திரு நாரணன் ருனென்(று)
ஏனி சைத்தனன் குருகையூர் முனிஎன இகழ்ந்திட்(டு)
ஆனி யுற்றவர் உறுமவர் அளவிலா ரன்றே. 26

அன்று மின்றுமற் றென்றும்வாழ் மாதவன் அன்றி
ஒன்றும் நானறி யேன்எனத் துணிந்துசொல் உரவோன்
துன்று நீர்ப்பொரு னையின்வட பால்வினுார் தோற்பக்
குன்று ருவுளத் தொடுதிகழ் குருகைநா யகனே. 27

நாயி னும்கடை யாய்ப்பல துயரிடை நலிவேன்
வாயி யம்புபுன் துதிவிழைந் தனன்தமிழ் மாறன்
பாயில் மாசுணத் தினைக்கொளும் மாலருட்பாங்குள்
மேயி கத்தொடு பரம்புகழ் வீறுகொள் வேனே. 28

வேனில் மாரனை அனையநம் மகவென மெய்யா
மானி னைந்தலர் வகுளம்சூந் திடப்பெறும் வள்ளல்
பானி கழந்தசெந் தமிழ்மறை பழுதறு பரம
ஞானி கட்கமு(து) ஏனையர் பலர்க்குமோர் நஞ்சே. 29

நஞ்ச யின்றவன் ஆதியர் நாணுற நால்வாய்க்
குஞ்ச ரம்புரந் தவனைஉட் கொண்டுதென் குருகைத்
தஞ்ச மாயவன் தனையவன் ருன்எனச் சாற்ருர்
வஞ்ச கக்கொடுந் தகையினர் என்பது வழக்கே. 30

வழக்குண் டென்றுபல் மதத்தார்பால் வாதிட மாட்டேம்
சழக்கில் கேசவன் இரணியற் றடிந்தவா(று) உன்னி
முழக்கும் நான்மறை முடிப்பதாம் குருகைமா முனிசொற்
பழக்க மெய்தி எட்டெழுத்தையே பகர்தரும் யாமே. 31

யாமுட் கொள்ளுமோர் குறிப்புளதென் எனில் எறிநீர்ச்
சோமு காசுரற் றடிந்தவன் அனையவர் துலங்கிற்
பாமுப் பாற்றமிழ்ப் பராங்குசற் கிணைபக ராழ்வார்
தாமும் மாநிலத் துதிப்பர்என் றுன்னிடல் தானே. 32

தான மால்களிற் றெலிமலி தருந்திருக் குருகூர்க்
கோன வாவலின் னெல்லையூர்க் கரடகொம் பன்றன்
மான மார்தரப் பகர்கவி நூற்றிடை வகுப்ப
ஆன பத்திவை துதிப்பவர்க்(கு)அருவினை அறுமே. 33

அறுசீர் விருத்தம்

அறுநெறிப் பகுதி தோறும் அவிர்பல வடிவும் ஆகி
இறுதியும் முதலும் இல்லா(து) இயங்கும்அம் பரமே மாலென்
உறுதிஎம் தமிழ்த்தென் னாட்டுள் ஓங்குதண் குருகூர் மாறன்
மறுவறத் தொடுத்த பாடல் வண்பொருள் உணர்வார்க்(கு)
உண்டே. 34

உண்டெனில் உள்ள தாகும் உயர்பெருந் தெய்வம் என்ன
வண்டமிழ்ச் சடகோ பன்றன் வகுத்தசொற் பயன்நன் கோர்வார்
பண்டைநூற் கதைகள் ஆழ்ந்து பரதவித் துழல்வார் கொல்லோ
தொண்டர்தாள் மலர்கள் சூடித் துரிசறு தவஞ்செய்வாரே. 35

தவமிகப் புரிந்துவாடும் தன்மையீர் சடகோ பன்றன்
உவமையில் புகழே நாடி உருகுமின் உமது நெஞ்சின்
அவலமுற் றொழியும் மாயன் அருட்பெருக் கவிரும் அப்பால்
பவளநேர் கமலப் பாவை பரிந்துவந் தமர்வாள் அன்றே. 36

வந்தனைச் சடகோ பன்றன் மனமுதற் பொருள்கள் எல்லாம்
பைந்தகைத் திருமால்கொள்ளும் பாலஎன்று ரைத்த வுண்மைச்
சிந்தனை யுடையார் யாரோ தெரிகிலேம் அவர்தம் பொற்றாட்(கு)
எந்தம துடமை யாவும் எனக்குறித் திருக்கின் றேமே. 37

இருக்குமுற் பகர்பன் னூலும் எண்ணிமிக் கிடைய வேண்டாம்
சுருக்கமாய்ப் பரம ஞானச் சுடர்ச்செழுங் கதிராய்த் தொன்மைத்
திருக்கிளர் குருகை யூரில் தேசிகன் செப்பும் வேதத்(து)
உருக்கமுற் றொருசொற் பற்றி உய்யலாம் உலகத் தீரே. 38

உலகம்யா வையும்தன் வாயால் உண்டுமிழ்ந் தளிக்கின் றானும்
திலகவாள் நுதற்பொன் மாதும் திருவருள் சுரக்கும் பேறு
கலகவா திகளைக் காயும் கவிபகர் காரி மாறன்
பலகவின் கலையும் நாடிப் பரவுநர்க்(கு) எளிதாம் அன்றே. 39

தாமரைக் கண்ணன் ருனே தமிழ்ச்சட கோபன் என்ன
நாமறிந் துரைக்கை வேண்டார் நான்மறைப் பனவ ரேனும்
பாமரர் ஆவார், இச்சொற் பாரதி யறிவாள் சற்றும்
சாமறு பிறப்பில் லாதார் தமக்குயிர்த் துணையாம் என்றே 40

என்றுலாம் ககனத் தாரும் இகதலத் தினரும் காண
அன்றுமால் களிற்றைக் காத்தான் ஆதியம் பகவன் தன்னுள்
நின்றுள உண்மைகூறி நீள்நிலம் உய்யச் செய்தான்
மன்றுதோ ரொலிக்கும் கீர்த்தி மலிசட கோபன் மன்னே. 41

மன்னும்ஆ ணவத்தாற் சொந்த மகவையும் துயர்செய் தோனும்
பொன்னுருத் தகுவன் மார்பம் போழ்ந்தருள் புனித மூர்த்தி
தன்னுடைப் பொருளாம் மாறன் தனைத்துதித் துய்யச் செய்வான்
என்னுளத் திலங்கும் உண்மை இயம்பினும் உணர்வார் இன்றே.

இன்றுநம் ஆழ்வார் ஓர் சற்(று) இன்னருள் சுரந்திட் டெண்ணில்
கன்றுமேய்த் தவன்பால் ஓர்சொற் கழறிடிற் கடல்சூழ் ஞாலம்
அன்றுவிண் ணுலகும் மற்றை அண்டமும் அவற்றுள் ளாரும்
நன்றுரைத் திறைஞ்சும் வாழ்வும் நந்தமர் உறுவார் அன்றே. 43

உறுகண்முற் றெழிக்கும் தெண்ணீர் ஒழுகுதண் பொருநைத் தென்பால்
மறுவில்சீர்ப் புளிக்கீழ் வாழும் மாமுனி தனக்கு நெல்லைச்
சிறுவன்ஓ தியபா நூற்றுள் திகழிவை பத்தும் தேர்வார்
அறுவகைச் சமயத் தோரும் அறிவரும் அதுகொள் வாரே. 44

கலி நிலைத்துறை

வாரார்மென் முலைமாதர் மயல்கொண்டு தடுமாறும் அடியேனும் நின்
நாராய ணன்பாதம் நணுகச்செய் தாய்நிற்கு நான் என்செய்வேன்
போராடு மதவாதி களும்மெச்சு துயிலற்ற புளிநீழலுற்(று)
ஆராத னஞ்செய்யும் அவர்வெளவும் அவைநல்கும் அருளாளனே

ஆளாகி யோரெட் டெழுத்துங் குறித்தோதி அசலக்குடைத்
தோளானே நண்ணும் தொழும்பெய்தி லேன்என்று தோயச்
செய்வாய்?
வேளாம வன்சிந்தை மிகநாண அவன்மாலே மலேவுற்றும் வேல்
வாளாய கண்கொண்ட மடவாரை மதியாது மகிழ்மாறனே. 46

மகிழத் தொடைத்தோ ளிரண்டும், பொன் மகள்வாழும்
மலரொன்றெனு
அகிலத்தின் முற்காணு முகமும் துணேத்தாளும்
அவிர்நாள் எதோ?
முகில் வெட்கு நிறமெய்தி முட்போலும் எயிருரும் மூரிப்படத்(து)
அகியுற்று யின்ருனே மறவாரின் முதலாய ஆனந்தனே. 47

நந்தன்றன் மகனென்ன நவில்கைக்கும் நாணுத நாராயணன்
எந்தம் பிழைக்கொல்கி யாளாதி ருக்கும்கொல் இயல்கொண்டுபல்
சந்தங் களும்சொற்றும் அருளாத விதம்என்கொல் சமமேலிலாக்
கந்தங்கொள் வகுளம்பு னேந்தாய் அவன்கொண்ட கவிநாதனே.

நாதங்கள் ஓர்ஒன் பதிற்கப் புறத்தாடல் நவில்நாரணன்
வேதன் தனேத்தந்த மலருந்தி யான் என்னே விடல் எங்ஙனே?
தீதந்த சுருதிக்கண் முழுதாயி னுன்என்கை நிசமல்லவோ
சீதம்பொ லிந்துள்ள குருகூர்செய் தவமாய சிறுமைந்தனே. 49

மைந்தாரும் ஓராயி ரஞ்சென்னிமிசைபார்கொள் மணிமாசுணம்
நந்தாத புளியாயு னேக்கொள்ளும் அதுகண்டும் நரன்என்றெணிச்
சிந்தாகு லத்தெய்தும் இளேயார்க ளொடுவாது செய்யச் செயேல்
செந்தாம ரைக்கண்ண னேச்சிந்தை நடுவைத்த திறன்மாறனே.

திறல்மிக்க பலகோடி சமயத்து ளாரும் திடுக்கெய்தநின்
அறமிக்க மறையாயும் அவரின்பம் உறல்காணும் அதுநாடலால்
மறமிக்க என்புன்மனத் தென்று களிவாரி மலியுங்கொலோ
புறமிக்(கு) அனகமாயன் எனஙீடு புளிமேய புகழ்வாரியே. 51

புகர்வார ணத்தைக் கராஒன்று பற்றிற் புழைக்கையெடா
பகரோர்சொ லேறும் செவிக்கென்சொல் ஏருத பண்பென்
கொலோ !
மகராலயத்திற் கிடந்தானை நெஞ்சத்துள் வைத்திட்டதால்
நிகர்தீர்பு கழ்ச்சாக ரந்துற்றுேர் புளியூடு நிலவண்ணலே. 52

நிலவிற்பல் பிளவன்ன பற்கொள்ளும் அகல்வாய் நெடுஞ்சீயமாய்
இலகுற்றுேர் பொல்லானை அட்டங்கொர் தொண்டற்(கு)
இதம்செய்தமான்
அலகற்ற தீயோரிடைப்பட்டு வாடென்னை ஆளாததேன் ?
சலசத்த டாகந் தழைக்கின்ற குருகூர்கொள் சடகோபனே. 53

சடகோப னேயன்ன ஆழ்வார்கள் பல்லோர் தழைத்தாரெனத்
திடமாக நுவல்வார்தம் வாயென்னை என்னென்று செப்புங்
கொலோ
இடமேவி நிலமாதும் வலமேவி மலர்மாதும் இன்புற்றிடப்
படநாக அணைமீது துயில்வான்மெய் யடியார்ப தத்தூள்களே. 54

களையன்ன பொல்லாரும் இகழாது புகழ்கின்ற கருணைப்பிரான்
வளைமன்னு குருகைத் தமிழ்ப்பாவ லான்மீது வரைமால்வனத்(து)
இளையன்சொல் கவிநூற்றுள் இவைபத்தும் வழுவாதி
சைக்கின்றவர்
தளையொன்று மின்றித் தனித்துண்மை ஞானத் தவங்கொள்வரே.

கலி விருத்தம்

கொள்ளை வண்டமிழ்க் குருகை யூரனைப்
பிள்ளை யோதிமப் பெடையொப் பாமெழில்
வெள்ளை வாணியும் வியப்ப துண்மையேல்
எள்ளை நேர்பழிப்(பு) எவர்சொல் வார்களே. 56

வாரி மேற்றுயில் மலர்க்கண் மாயவன்
பேரில் அன்புடைப் பெரியர் பற்பலர்
காரி மாறனிற் கருதிக் கண்டவர்
பாரில் இன்றெனப் பகர லாகுமே. 57

ஆகு லங்கெடுத் தருள ஐம்படைக்
காகுத் தன்வரு காரணம் சொலிற்
பாகு நேர்தமிழ்ப் பனுவல் மாறனும்
மாகு ணக்கடல் வாஞ்சை ஒன்றுமே. 56

ஒன்றி ரண்டென உரைக்கொ ணுநிலை
நன்றெ னப்பலர் நவில்வர் ஆயினும்
குன்ற நேர்புகழ்க் குருகை யூரினிற்
சென்று சேர்நெறி தெரித்தி டார்களே. 59

ஆர ணங்களும் அறிவொ ணுப்பரி
பூர ணன்தனைப் பூமின் ஞர்புணர்
நார ணன்திரு வுருவில் நாடினுன்
வார ணம்பொரு குருகை வாணனே. 60

வாணன் தோளற வரிவிற் கோலினன்
தாண யந்தவர் தம்மிற் றண்மலர்
மாண ருப்புளி மரத்தில் உற்றுளான்
ஆணம் மேலென அறிதல் ஏற்றமே. 61

ஏற்று வெண்கொடிக் கிறையும் வேதனும்
போற்று நாரணன் பொருவில் சீரெலாம்
சாற்று வானடற் காரி தந்தசேய்
பாற்று ஞானிகள் பழகும் வீடதே. 62

வீடல் அஞ்சிய வேழம் காத்தவன்
தாட லைக்கொடு தவஞ்செய் வாரினும்
கோடல் தீர்புகழ்க் குருகை யூரனை
நாட வல்லவர் நலங்கொள் வாரரோ. 63

அரந்தை மிக்குறும் அவுணச் சேயினைச்
சிரங்கள் ஆயிரம் திகழ்வெண் சீயமாய்ப்
புரந்த நாரணன் புளியின் கீழ்வளர்
வரன்தன் கண்ணினுள் வசித்த தோர்மினே. 64

ஓர மின்றிய உணர்வி னூற்றமிழ்
வார மிஞ்சும்ஆழ் வாரை வாழ்த்திடிற்
பூர வாகனப் புனிதை கொண்கனே
நேர வாழ்நலம் நிலத்தும் எய்துமே. 65

எய்த ரும்பதம் எய்தி இன்றமிழ்
பெய்த மாறன்மேற் பிணக்கில் நெல்லையான்
செய்த பாட்டொரு நூற்றிற் பத்திவை
உய்தமோ(டு)உரைத் துணர்மின் உண்மையே. 66

அறுசீர் விருத்தம்

உண்மைஒன்று சொல்கின்றேன் உலகத்தீர்!
யாஞெருசொல் உன்னும் முன்னம்
வெண்மைநிறப் பாரதியோர் சொற்கருதி
எழுதும்வண்ணம் விதிக்கின் றுள்இவ்
வண்மையறி வார்எவர்நம் சடகோப
முனிவனிரு மலர்த்தாள் போற்றிப்
பெண்மையக லாஉரத்தெம் பெருமாளைக்
கருதினன்றிப் பிறங்கி டாதே. 67

பிறங்கல்நெடும் குடைகொடந்நாள் பெற்றமுய்யக்
காத்தருளும் பெருமாள் இந்நாள்
மறங்கடுக்கும் பலரூர் தோ(று) இருப்புலக்கை
யாலவற்றை வதைக்கக் கண்டும்
உறங்குகின்ற கொடுமையைமற் றுரோடிங்(கு)
உரைத்தழுவேன் உனைவிட் டந்தோ
அறங்கள்மலி தென்குருகூர்ச் சடகோபா!
எனக்கொருசற் றருள்செய் வாயே. 68

அருள்வாய்ந்த அகச்சமயம் மூவிரண்டும்
பிழைஎனச் சொற் றயற்கப் பாலாம்
மருள்வாய்ந்த புலைச்சமயக் குறும்பர் உறுக்
கிடும்கொடுமை மறந்து தம்மில்

இருள்வாய்ந்த வாதமிட்டுக் கெடுவார், நின்
தமிழ்வேதத்(து) இசைக்கும் உண்மைப்
பொருள்வாய்ந்த புலவரெனத் திகழ்வதென்னே
குருகைநெடும் புளிக்கீழ் வாழ்வே. 69

வாழ்வொருங்கு நல்கெனப்போற் றிசைக்குமெனுள்
திருநெடுமால் வந்து வந்து
வீழ்வனமுற் றருள்வான்போல் விளையாடித்
துயர்விளைக்கும் விதத்தை வேலை
சூழ்வியன்பார் உலகினர்பாற் சொலப்போமோ
உண்மைநன்கு துலங்கப் பாராய்!
ஏழ்வகையின் இசைத்தமிழ்ப்பாப் பொழிமேகம்
எனக்குருகை இடத்துற் றோனே. 70

இடரில்அல்லிக் கேணிநகர்த் திருநெடுமால்
என்றனக்(கு) அன் றெழுதித் தந்த
கடன்முறியில் உன்னதுகை யொப்பமின்றே
எண்ணில்பல கவிஞர் தாமும்
நடனமயிற் குகனும் ஒப்பம் இட்டமெய்பொய்த்
தொழியில்அந்தோ நானென் செய்வேன்
அடல்விடைப்பா கனையனையார் அறிபுகழ்வாய்ந்(து)
எளிற்புளிக்கீழ் அமர்வல் லோனே. 71

வல்லகொடை தருவான்போன் றனைப்பலவா(று)
ஏமாற்றி மதுர மீறும்
சொல்லமைந்த பாமாலை சில புனைந்து
கொண்டுமிகத் துயர்செய்கின்ற
நல்லனந்தைப் பெருமாளுக்(கு) இது முறையோ
ஒருமொழிநீ நவிலொண் ணாதோ
பல்லவத்தண் புளிநிழற்பான் மதுரகவி
புனையும்இரு பாதத் தானே. 72

தானலதோர் பொருளறியாத் திருவரங்கப்
பெருமாள்முற் சாற்றும் பற்பல்
வானவர்க்குந் தமிழ்பாடிப் பரிசு பெறு(து)
உனைத்துதிக்கும் மனமுற் றேன்காண்
ஈனரிடத்(து) இரந்தலையாப் பெருமையின்னே
தரவேண்டும் என்செய் வாயோ
பானல்வயற் குருகூர்வாழ் சடகோபா!
ஒருசிறிதும் பழுதில் லானே. 73

ஆனேறும் பெருமானும் மலர்க்கமலச்
செழும்பொகுட்டில் அயனும் போற்ற
மீனேர்கண் இருவரொடு வெண்கடலில்
துயில்கூர்வான் விரும்பும் என்னை
ஏனெனித் தனைபடுத்தத் துணிந்தானோ
அரனையொப்ப என்றுள் வானோ
மானேர்மின் ஞர்நடிக்கும் மறுகுடைத்தென்
குருகூரின் வாழ்வா னனே. 74

நான்பரமென் றிறுமாந்து பலரும்வழி
படமகிழ்ந்தான் நாசம் எய்த
ஊன்பதறிப் பெரிதேத்தும் ஒருமதலை
களிகூர உதித்த சீயம்
தான்பரவுந் தமியேற்காத் திருவுளத்திற்
சிறிதிரங்கும் தருணம் யாதோ
வான்படுதண் புளிநிழற்பால் மகவான்கண்(டு)
ஏங்கவளர் மகிமை யானே. 75

யான்எனதென் றிடுஞ்செருக்கோர் இரண்டுமின்றிக்
குருகையிலுற் றென்னும் கையாத்
தேன்எனத்தண் டமிழ்மாரி திருமருமார்
பினன்புயத்தில் தினம்பெய் யாழ்வார்
வான்எனக்காற் றெனச்செந்தீ எனநீர்மண்
எனவயங்கு வனமுற் றுன்னேன்
தான்எனச்செப் பியமாற்றம் சரதமெனில்
இனிப்பிறவாத் தகைதோய் வேனே. 76

வேணூர்தண் குருகைநகர்ச் சடகோபன்
திருவருட்சீர் விரும்பித் தொண்டர்
ஆனூர்தம் பதத்துகளை அநுதினமும்
தலைக்கணியும் அவன்சொல் நூற்றிற்
பானூறும் வாயினரும் பொருளுணரப்
பகருமிவை பத்தும் கொள்வார்
வானாட்டுப் புலவருக்கும் அரிதாய
பெருமைமிக மருவு வாரே. 77

எண்சீர்ச் சந்தக்கவி

தனதன தந்தன தந்தன தனனா

மருமலி பைந்துள வம்பொரு தமிழால்
வனைதரும் என்கவி கொண்டுள நெடியோன்
இருண்மிகு வண்டரி டம்கலி வலிஓ
திடவிடு கின்றதென், அங்கவன் உரம்வாழ்
அருணம டந்தையும் அங்கயல் விழியால்
அருள்புரி கின்றிலள் என்செய்வன் நினையாய் !
குருகைவ ளம்பதி யின்புளி யருகே
குரவரி னம்பர வுஞ்சர ணினனே. 78

தனதன தத்தன தத்தன தனனா

சரணம லர்க்கம லத்துணை கொடநாள்
தரையொடு விட்புலம் உற்றள வினனே
அரனயன் முற்பகர் பற்பலர் வடிவாய்
அவிர்தலு ணர்த்துநின் அற்புதம் அறிவேன்
முரணுறும் அற்பநெ றிச்சிறி யவர்வாய்
மொழியின் மயக்கமொ ழித்தனன் அருளாய்
புரவலர் மெச்சிய பொற்புறு குருகூர்
புனிதமு றப்புளி யுட்புகும் அரசே. 79

தனதன தனதன தாத்த தானன

அரசடி யுறுபுலை மூர்த்திதாள் தொழு(து)
அகமகிழ் வுறுகொடு மூர்க்கர் ஆதியர்
கரவற முயல்பவர் கூட்ட மூடமர்
களியுமெய் திலன் என(து) ஏக்கம் ஈர்குதி
சரமழை முகில்நிகர் பார்த்தன் ஏறிய
சகடமுன் நடவிய கீர்த்தி யானருள்
விரவிய திருவுளம் வாய்த்து ளாய்வளம்
மிகுகுரு கையில்வளர் மாட்சி யாளனே. 80

தானன தானன தனனா தனனா

ஆளென வாயள வினும்ஒ திலனே
ஆய்மிக ஏசிய சிசுபா லனும்வாழ்
தாளினை வீழ்தரின் இழிவார் தருமோ
தானவ மாவலி பெறல்வீண் மொழியோ
வாளென நீள்விழி மடவாரையும் ஆள்
மாயனென் ஆசைகள் அறியா தவனோ
கோளெனல் தீர்தரு குருகூர் முனிவா
கூறுதி யோரமில் குணசா கரனே. 81

தானத் தத்தன தனத்த தானா

சாகத் தைக்கொடு கனற்கு நேரே
சாவச் செற்றதன் நிணத்தொ டுனோர்
யாகப் பித்தரை மதித்தி டாநான்
ஈனப் பட்டிவண் இளைக்க லாமோ
போகச் சொர்க்கமும் நினைப்பெ னாவோர்
போதத் தைத்தரல் பிழைத்தி டாதாள்
மாகத் தைத்தொடு புளிக்குள் வாழ்வாய்
மாயற் சித்தம தனிற்கொள் வானே. 82

தான தனந்தன தனத்த தனஞ

வான மடந்தையர் மயக்க மதஞல்
மாசு படுஞ்சிலர் மதிக்கும் விரிவார்
பானல் வனந்தனே நிகர்த்த நெடுமால்
பாதம் விரும்புணர் வுதிக்க முயல்வேன்
ஈனர் செயும்பொருள் இரக்கை முறையோ
ஏம அணங்கொடி(து) உரைக்க நினேவாய்
கான முறுந்தமிழ் மறைக்கொர் தலேவா
காமர் மிகும்புளி யிடத்தின் அமுதே. 83

தனனத் தனனத் தனனத் தனஞ

அமுதக் கவளக் கரியிற் றிரிவான்
அமற்பொற் பதியிச் சையைவிட் டும்ஐயோ
குமுதத் தினேயொத் தவிர்பொற் பிதழார்
குயம்நத் திமிகக் குலேயத் தகுமோ
வெமுரற் செறும்அச் சுதனட் பதஞல்
மிகுவப் புறமெய்த் தவசைப் பகர்வாய்
கமுகிற் றுணரைக் கயல்துய்த் தளிகூர்
கமலக் குருகைக் கவிவித் தகனே. 84

தனனத் தனதன தாந்த தாஞ

தகரிற் கடைநிகர் மாந்த ராவார்
தவளக் கடல்துயில் நீண்ட மாலால்
இகலற் றுயர்கரி போன்று ளார்பால்
எதிரிட் டிகழ்மறம் மாய்ந்து நீர்சூழ்
அகலப் புவிகளி கூர்ந்து வாழ்நாள்
அதனேக் கருதுணர்(வு) ஈந்த தாரோ
பகர்சத் துவகுண சாந்த சீலா
பழமைக் குருகையில் ஓங்கு கோவே. 85

தானத் தனதன தய்யன தனஞ
கோவைக் கனிநிகர் செவ்விதழ் மடவார்
கோலத் தினைமிக வௌவிய மருளேன்
ஆவைக் கொலைபுரி புல்லியர் கெடுமா(று)
ஆசைப் படல்பிழை யல்ல, நல் கிடலாம்
நாவைக் கொடுதுதி செய்சிசு உயுமா
நாமக் கனகனை வெல்லரியுடன்ஓ(து)
ஏவைப் பொருவிழி மல்கினர் நடமா(டு)
ஏமக் குருகையில் வைகிய முனியே. 86

தனதன தன்னன தத்தன தானு
முனிவரில் வன்மைமி கக்கொள்நம் ஆழ்வார்
மொழிதரும் உண்மைம றைப்பொரு ளோரார்
மனிதரில் மண்ணில் வரற்குமுள் நாணு
மணிநிற வண்ணன்மு ழுப்புகழ் தேருர்
பனிதரு வெண்மை மதிச்சடை யான், நூல்
பழ(கு) உரன், விண்ணுல குக்கிறை யேபோல்
அனியர்கள் அன்னவ னுக்கய ல்வாழ்
வதுநிசம் என்னநி னைத்துழல் வாரே. 87

தானன தந்தன தத்தன தானு
வாரிவ ளைந்தபு வித்தலை யேநேர்
மாணுறு தென்குரு கைப்பதி ஆளோர்
காரிம கன்கரு ணைத்துணை யாலே
கார்நிற விண்டுவி னைத்தொழு வான், வேய்
ஊரிடை வந்ததி ருப்புக ழான்(ஓது)
ஓர்சத கம்புகு பத்திவை ஓர்வார்
சீரிய இந்திரன் முற்பகர் மேலோர்
சேருல கம்புகழத் திகழ் வாரே. 88

அறுசீர் விருத்தம்

திகழும் ஆழியும் சங்கமும் தண்டமும் சிலையும்வன் திறல்வாளும்
புகழும் பைந்துணர்த் துளவமும் மணியும் நற்பொறியும்வாழ் புயமாலை
இகழ்வார்களும் அவனடிக் கடிமை செய்து இயற்றமிழ் மறைபாடி
நிகழும் தென்குரு கூரனைப் பழித்திடார் நிச்சயம் உரைத்தேனே.

உரைத்திடுந் துவாபரயுகக் கடைசியில் சிறியதாய் வயிற்றுள்ளாய்
இரைத்தெழும்கலி யுகமுகத் தினில்உதித் திடும்குரு கூரானை
வரைக்கை வேடனால் இறந்ததிற் களவுசெய் மால் தமிழ்மறை
செய்வான்
தரைக்கண் வேறுடல் எடுத்தனன் போலும்என் தன்மையர்
சிலர்தாமே. 90

தாம ரைத்தடங் கண்ணனை எண்ணில்பல் சமயமும் புரப்பானைக்
காம னைப்பயந் தருளிய கடவுளைக் காரிதன் மகனேபோல்
நேமம் வைத்துணர்ந் தவர்எவ ராயினும் நிசம் சொல்வேன்
அவர்தம்மைப்
பூமன் இந்திரன் சிவன்முதற் பற்பல புலவரும் எனலாமே. 91

ஆமை யாய்ப்பெரு மகரமாய்ப் பன்றியும் ஆயவன் தனை நாடித்
தீமை தீர்தர முயன்றுளீர் அவன்இடம் திரைமுதற் பலவாமால்
யாமை யோ(எது)என். றேத்துது மௌனமலைத் திளையன்மின்
இயற்பாண்டிச்
சீமை யிற்குரு கூர்ப்புளி நிழல்உளான் சிந்தைஎன் றறிவீரே. 92

அறிவு மாய்அறி யாமையு மாய்ப்பக ரவைகடந் தவிர்ஞானச்
செறிவும் ஆயவன் மாயன்என் றோர்ந்த மெய்த் திடம்பொலி
சடகோபன்
குறியும் கொள்கையும் கூறினன். கூறிலன் குறைவில்அன்
னவன் நூலே
பொறியுளார்களுக் கினியதாம் மற்ற நூல் புண்படச் செயுமன்றே.

படம்கொள் பாம்பணைத் துயில்விடுத் தெழுந்தரிபாருல குயற்காகும்
அடம்செய் யான்இனி யெனஎன்றோர் கனவிலன்(று) அறைந்தநம்
பெருமாட்டி
திடந்த வாதசொற் பொய்கொல்என் றெண்ணியுந் தியங்குமென்
தனையாளாய்
வடந்தன் நீழலில் இருந்தவர் வியப்பஓர் வன்புளி அமர்ந்தோனே.94

அமரரூர்ப்பெரு வாழ்வையும் ஈனமென் றருவருத் திடுமுண்மைச்
சமர சந்தரு துணைப்பதத் தால்முனோர் தமிழ்ப்புல வனையாண்டாய்!
விமல வாழ்வளித் தென்னையும் ஆட்கொளில் வியன்கழல்
பொருவேன்காண்
கமல நீர்வயற் குருகையில் அரிமகிழ் கவிமழை பொழிவானே. 95

மழையின் மும்மதம் பொழிந்தல றிடும்கரி வாழ்வுறச் செய்யும்மாயன்
குழையும் நெஞ்சொடு துதித்துரு கிடும்எனைக் குறிக்கொளா விதம்
யாதோ
பழைய வாஞ்சைமுத் தமிழ் மிசை யின்றுகொல் பன்னிரு
நெறியோரும்
விழையு மாவெரு புளிநிழற் பால்அமர் வித்தகப் புலவோனே. 96

புலவுண் வாய்கொடு தனைப்பர மாம்எனப் புகன்றஆ டகன்தன்னை
அலகில் புண்ணியம் பெறக்கொலும் அரியொர்தூ ணதனிடை
வரலாலே
குலவு தூணெலாம் மதிக்குமென் நெஞ்சகம் குலவுதென்
றறுங்கொல்லோ
பலபல் ஆயிரம் புவனமும்நிறைபுகழ்ப் பராங்குசன் அடியாரே. 97

ஆர ஓசையும் மதுரமும் நிறமும்வைத் தருந்தமிழ்க் கவிபாடும்
வீர நாவல ரேயொரு மாற்றம்யான் விளம்புவேன் இகழேன்மின்
நார ணன்றனக் காயிரம் கவிசொலி நலம்பெறும் நம்மாழ்வார்
வாரம் வேண்டுமின் இறப்பொடு பிறப்பறு மகத்துவம் பெறலாமே.

பெறல ரும்புகழ்க் குருகையூர்ப் புளியுணர் பிள்ளைமா முனிதன்னை
அறம்நி லாவிய நெல்லையம் பதியில்வந் தவிர்திரு வுருவாளன்
பிறவி நோய்கெடத் துதிசெயும் நூற்றிடை பிறங்குபாட்
டிவைபத்தும்
மறமில் நெஞ்சொடு துதிப்பவர் விரும்பிய வரங்கள்முற் றடைவாரே.

எண்சீர் விருத்தம்

அடையலர்க்கோர் கோடையிடி யாகி நல்லோர்க்(கு)
அன்னையாய் அகச்சமயத் தடியார் கூட்டத்(து)
இடைவிளங்கித் தலம்தொறும்போய்ப் பதிகம் பாடி
இறப்பினொடு பிறப்பறுஞ்சீர்க் கிச்சித் தேன்காண்

கடைபழகும் நாளிலிரு மருதும் சாய்த்தான்
நல்கவல்லான் அல்லன்என நவிலப் போமோ
மடையில்வரும் வாளைஇளங் கமுகிற் பாயும்
வண்குருகூர்ப் புளியடியில் வளர்கின் றோனே. 100

வளம்படமா தவம்புரியும் திறமை யில்லேன்
மனநிலைத்த பெரியோரை மதித்துச் சற்றும்
உளம்பதரு(து) அளவில் நிந்தை தினமும் சொல்வேன்
உரைக்கரும்பல் குற்றமற்றும் உள்ளேன் யாவர்
விளம்புமெந்தத் தெய்வமுந்தா னாகித் தெண்ணீர்
மிசைக்கிடப்பான் அருள்மிகவும் விழைந்தார் போன்றேன்
தளம்படுநின் தாமரைத்தாள் சூட்டி ஆளாய்!
தனிக்குருகூர் வாழவந்த தமிழ்க்கோ மானே. 101

தமிழருமை அறியாதார் வாயில் தோறும்
தனமிரந்து பரதவிக்கும் தவறு நீங்கிக்
குமிழனைய நாசியுள்ளார் ஆசைப் பேயும்
குலைந்தோடக் கண்டுநின் நூல் கூறும் பேற்றில்
அமிழ்வதற்கே விழைகின்றேன் என்செய் வாயோ
அடியேனைத் தடுத்தாள(து) அகற்ற வேண்டாம்
இமிழ்புனற்றெண் ணீர்ப்பொருநைத் தென்பாற் றோன்றும்
எழிற்குருகூர்த் திருக்கோயில் இடத்துற் றோனே. 102

உற்றாரும் ஊரவரும் அறிய நாளும்
உனக்காளாய்ப் பணிபுரியும் உறுதி யில்லேன்
மற்றாரும் அறிவரிய உண்மை காட்டி
மகிழ்வித்தாய் தனிவீட்டை மதித்தி ராமற்
கற்றாவுண்(டு) உவப்பவர்மேற் சினங்கொண் டுள்ளம்
கலங்குகின்றேன் சிறிதுகடைக் கணித்தென் றுள்வாய்?
செற்றாளில் அனந்துயில்சீர்க் குருகூர் அப்பா!
நின்கருத்தை யானுலும் நிகழ்த்தில் நன்றே. 103

நன்றறியாப் புன்புலவர் சிலரும் முன்னாள்
நவின்றபடி நடத்தியதா நவில்வார் பாரில்
ஒன்றலது தெய்வம்மற்றென் றிலையென் றோர்ந்தும்
உனதுதமிழ் மறைப்பொருளில் உறுதிகொண்டும்
என்றனது விருப்பமுற்று விதமென்? முன்னாள்
இயற்கவியொன் றுடன்போம்பண்(பு) இந்நாள்இன்றோ.
பொன்றுடன் பிறத்தலறத் துயில்வுருப்பொற்
புளியமரத் திடையிருந்த புனிதத் தானே. 104

புனிற்றிளங்கன் றுடன்ஆன்கொன் றருந்தும் பொல்லாப்
புலையர்குல வேரறுத்துப் பொருமும் திண்தோள்
மனிதர்களில் ஒருவன்எய்தப் பெற்றால் அன்றி
மகிழேன்என் றேங்குமவர் மாட்டெற் சேராய்!
தொனித்தமிழ்க் கடல்போல்வாய் இமையா தார்தம்
தொழும்புகொளும் நெடுமாலைத் தூய நெஞ்சில்
தனித்திருக்கக் கண்டுவந்தாய்! குருகூர் மேய
சடகோபா! நிகரில்பெருந் தன்மை யானே. 105

தன்னடியார் பிழையறியான் என்னும் நாமந்
தனைநெடுமால் என்னளவும் தணந்தான் கொல்லோ
பொன்னவளும் அருளிலளா யினளோ, நான்இப்
புண்படுதற் காரணம்ஏன்? புகல்என் பாடல்
இன்னமுதொத் தினிப்பஅன்றோ? என்னிற் பொல்லார்
எத்தனையோ பேர்க்குமுத்தி ஈந்தி லானோ?
தென்னவன்நாட் டணிக்குருகூர்ப் புளிக்கீழ் வாழும்
சிறுமுனிவா! செழுங்கனிவாய் திறந்தாள் வாயே. 106

தாள்பிடித்துப் பெரும்புனலில் இழுக்கும் பேழ்வாய்த்
தனிமுதலைக்(கு) அயர்ந்தழைத்த தந்திக்(கு) ஆழி
வாள்பிடித்த கையொடுபோய்க் காட்சி நல்கி
வாழ்வித்தான் மாயன்என்னும் வார்த்தை கேட்ட
நாள்பிடித்துத் துதிக்குமென்னைக் கனலிற் பொல்லா
நல்குரவால் வெதுப்பலன்றி நறும்பூ வானி
வேள்பிடித்த வில்லாலும் வருத்த லாமோ
வியன்குருகூர்ப் புளியினுக்குள் மேவு வானே. 107

மேவலன்போற் றுதைதுயர் செய்ய நொந்து
மிகமெலிந்து வாடுமைந்தன் வியப்பத் தோன்றிப்
பூவலயத் தொடுவானும் உய்யக் காத்த
புகழ்ப்பெருமாள் அரியுருவம் பொய்என் றெள்ளும்
பாவலர்எல் லாம்நடுங்கத் தரும்பே(று) என்று
பாலிப்பாய்! பரமகுரு பரனும் செஞ்சொற்
காவலனு மாய்ப்புளிக்கீழ் வாழும் எந்தாய்!
கருணைநெடுங் கடலனைய கண்ணுள் ளானே. 108

கண்ணன்இரா கவன்முதலா மூர்த்தத் தொன்றுக்
கனிவுடைய மெய்யடியார் கண்கள் எல்லாம்
எண்ணவளம் பொலிபாண்டிக் குருகூர்க் கோயில்
இடைவளர்பொற் புளியடியில் இருக்கும் ஆழ்வார்
அண்ணலுறும் வைகுந்தம் அன்றி ஓர்சிற்
றணுவிருக்கும் இடமும்இன்றென் றறைந்த ஞாயம்
திண்ணமெனத் தெளியவல்லார் எவரோ அன்னார்
திருவடிப்பூந் துகள்எனது சிரத்தின் மேற்றே. 109

மேற்றகைமைக் குருவாய குருகூர் நம்பி
வியனருளாற் பொருவிலின்பம் மேவ வேண்டிச்
சாற்றணியார் திருநெல்லைத் தண்ட பாணி
தமிழ்மொழியால் உதித்தபடி சாற்றும் பாடல்
நூற்றகத்தில் இவைபத்தும் கருதிப் போற்றி
நோற்குமவர் வாழிடத்தை நுவலின் என்றும்
பாற்றனிச்சங் குடன்ஆழி ஏந்து செங்கைப்
பரந்தாமன் திருவடித்தண் பதுமப் பூவே. 110

முற்றிற்று

யானேகண் டதிசயிப்ப என்னுவில் இன்னருளால்
தானேவந் துதிக்குமிந்தத் தமிழ்ச்சதகத் தந்தாதி
தேனேய்ந்த வகுளமொக்கும் திருக்குருகைச் சடகோபன்
கானேர்மெய் வயிணவர்தம் களிக்கடலின் அமுதாமே.

தெய்வமே துணை
ஆழ்வார் திருவடிகளே சரணம்

ஸ்ரீமந் நாராயணாய நம:

# சடகோபப் பத்து

காப்பு - வெண்பா

அடகோபந் தீர்ந்தார் அணிமகுடம் ஆகும்
சடகோபப் பத்துவெண்பாச் சாற்றக் - கடகோபத்
தந்திமுகம் காட்டித் தனியருளைத் தந்தோர் ஐந்தாம்
இந்தியம்செற் றருள் அரிகாப் பே,

நூல் வெண்பா

தேன்முகர்செந் தாமரைப்பூஞ் செல்வி அகலாத
மான்முகத்தி லுந்தி வழிவந்த—நான்முகன்சொல்
வேதங்கள் போற்ற விளங்கும் பரமகுரு
பாதங்க ளேசடகோ பம். 1

ஆறிரண்டு தொன்னெறியும் அச்சுதன்கூத் தாகுமெனக்
கூறியருள் உண்மைக் குருவருளால்—தேறில்
கழிக்கரிய புன்மதத்திற் கட்டுண்டோர் தாமும்
பழிக்கரிய தாம்சடகோ பம். 2

சித்தி புரிந்து திரும்பப் பிறவாத
முத்தி யடையும் முனிவோரை,—நத்திநத்தி
எத்திசைக்கும் போயருளும் எம்பெருமாட் கானமுழுப்
பத்தியளிக் கும்சடகோ பம் 3

ஈசன் சதுமுகத்தோன் இந்திரன்முன் னெவெடுத்துப்
பேசமரர் யாரும் பெருமாளென்—நேசம் நல்கி
ஆசகற்றும் மண்பெண்பொன் னையமூ எடணையின்
பாசமறுக் குஞ்சடகோ பம் 4

இறக்கும் பலதேவர்க் கின்னமுதம் நல்கிச்
சிறக்கவைத்து ளானருளைத் தேறிப்—பிறக்கும்
அலக்கண் ஒழிக்க அருந்தவம்செய் கின்றோர்
பலர்க்கும் பொதுசடகோ பம். 5

கூராழி சங்குதண்டு கோதண்டம் வாள்கொளுங்கை
நாரா யணனை நடுமனத்திற் - பேராமல்
நாடி அவன்புகழே நாளும் நறுந்தமிழாற்
பாடிடச்செய் யுஞ்சடகோ பம் 6

பின்னும்பஃ றேவர் பெருமான்அல் லாமலுள்ளார்
என்னும் இளைஞர் இதயத்தில் - தன்னுடைய
வண்புகழ்காட் டாது வழக்கிடுவார்க்(கு) எய்தாத
பண்பி னதுசடகோ பம். 7

கல்வரையொன் றேந்தியந்நாள் காலியினம் காக்கவந்த
செல்வனது சந்நிதியில் தெண்டனிட்டார்—நல்வரங்கள்
ஒல்லுவதற்(கு) ஆதாரம் உம்பலுணர் ஒண்பொருளாப்
பல்லுலகும் சொல்சடகோ பம். 8

இரணியனைப் போல்வார்க்(கு) இகலாம், அவன்மூன்
தரவருஞ்சேய் அன்னார்க்குத் தாயாம் - முரகரியை
நெஞ்சகத்துட் காணும் நிசயோகத் தோர்க்கருளாம்
பஞ்சமொழிக் கும்சடகோபம். 9

கற்றுணர்ந்த பாவலரும் காசில்பர ஞானிகளும்
பெற்று மகிழும் பெருமையே - முற்றுமாய்ச்
சற்றுமொன்றிற் றுக்கிலனும் தாமோ தரனருளைப்
பற்றுநம்மாழ் வார்சடகோ பம். 10

திகழ்தருதென் பாண்டித் திருப்புகழோன் அன்பாற்
பகரும் சடகோபப் பத்தும் - அகமலரிற்
கொண்டு வழுத்துமவர் கோதிலுண்மை ஞானமெய்தி
விண்டுவின்பொற் றுள்புகுவார் மெய். 11

முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

தெய்வமே துணை.

## குறிப்பும் — அரும்பதவுரையும்

காப்பு. பம்பு புனல் பொருநை - நீர் வளமுடைய தாமிரபரணி நதி, பால் - பக்கம். புளிக்கீழ் - புளியமர நிழலில். இருப்பான் - யோகநிலையிலிருக்கும் சடகோபர். அம்புயத்தாள் - தாமரை மலர் போலும் திருவடி. துகள்- பாத தூளி.

1. பெண்பெருமான் - திருமகளைத் தாங்கிய திருமார்பினையுடைய மாயன். வெறுத்து - ஆசையுள்ளவரை பிறவி விடாது. அற்றது பற்றெனில் உற்றது வீடு. (திருவாய்மொழி சடகோபர்) ஆதலின் ஆசையை நீக்கி. மாறன் - நம்மாழ்வார் என்ற சடகோபர்.

2. தாடாண்மை-மிக்க வலிமை. கோணாத - மாறுபாடற்ற. எற்பிறப்பு - எனது பிறப்பு.

3. ஏடனை - மண், பெண், பொன் என்ற மூவாசை.

4. சதமகன் - இந்திரன் (நூறு - யாகம் செய்தவன்) குருகை - ஆழ்வார் திருநகரி.

5. விழிமலர் - மலர் போன்ற கண். கார் முகில் - நீல மேகம்.

6. வகுள ஆபரணத்தான் - மகிழம்பூ மாலையணிந்த சடகோபர். நெறி - உயர்ந்தநிலை.

7. மாற்றங்கள் - ஒன்றுக்கொன்றுமாறுபட்டசமயக்கோட்பாடுகள். போற்றல் - போற்றுதல்.

8. ஆனை ஒன்றை - கசேந்திரன் என்ற யானையை. இருள் - அஞ்ஞான மயக்கம்.

9. கைத்து - வெறுத்து. காதலனை - மகனை பிரகலாதனனை. செய்தான் - இரணியன். தத்துவம் - உண்மைப் பொருள்.

10. சலனம் அற - கலங்காத உள்ளத்துடன்.

11. திருப்புகழ்க்காரன் - நூலாசிரியர் பெயர்

12. சேரலார்-பகைவர் (கொலைபுலையுடையவர்) புண் அற-மனநோய் நீங்க.

13. உளத்தவிசு - மனமாகிய பீடம். நல்குரவு-வறுமை.

14. வையவாணர் - உலகத்தில் வாழுமக்கள்.

15. அண்ணல்.........சொல் - திருமாலின் அருள் உரை.

16. வேதனை - பிரமனை. ஏதம் - வருத்தம்.

17. கூர - கூர்மையுடைய, வாரம் - அன்பு. எற்றையோ-என்றோ.

18. வாரி - கடல். தாபம் - இச்சை. சாப அம்பில் - வில்லிற் பூட்டிய அம்புபோல. (அம்பு பகைவரை ஒழிப்பது போல, ஆழ்வார் பாடல் அன்பர் வினையை நீக்கு மென்பதாம்.)

19. பெரும் பூட்கை - பெரிய யானை (கசேந்திரன்) உழி - இடம். கழி - அதிகமாக.

20. ஐயம் இன்றி - சந்தேகம் அற. கான் முளை - திருமால் இங்கு உள்ளான் என்ற உண்மை கூறிய சிறுவனை பிரகலாதன். ஓதநீர் - கடல் நீர்.

21. சித்தி - அருளாடல். சத்தி - வல்லமை.

22. அமைவனத்தான் - மூங்கில் வனமென்ற திருநெல் வேலியில் பிறந்தவர் இந்நூலாசிரியர். அமை - மூங்கில்.

23. கோட்டுவாரணம் - கொம்பினையுடைய யானை. பிளிறிய - யானை கத்தும் ஓசை பிளிறல் ஆம்.

24. ஒரு பது கவி உரைத்தவன் - மதுர கவியாழ்வார். இவர் சடகோபரது சீடர். சடகோபாழ்வார் முன்பாக வந்து; மதுரகவியாழ்வார் சடகோபரைக் குருவாகக் கொண்டு கண்ணிநுண் சிறுத்தாம்பு என்ற தொடக்-

கத்தையுடைய பத்துப் பாடலால் ஆனபதிகம்பாடி வணங்கினர். அதற்கு நம்மாழ்வார் கருணைகூர்ந்து. தாம் திருமகள் மார்பினனுன திருமால்மீது அந்தாதியாகப்பாடிய ஆயிரம் பாட்டுகளைக் கேட்ட திருமால் தனக்கு அநுக்கிரகித்த திருவருளை, மதுரகவியாருக்கு வழங்கினுர். ஆகவே திருமாலினும் ஆழ்வார் கருணை பெரிது என்ற கருத்தை, வினு மூலம் குறிப்பிட்டு ஆசிரியர் விளக்கினுர். "எவரே" என்றது வினு. ஆழ்வாரேயாம். என்பது விடை.

மேலும் - நூறுபாட்டால் அவர்போல, அந்தாதியாகச் சடகோபர்மீது பாடுகின்ற எனக்கும் அப்பேற்றினை ஆழ்வார் தருவார் என்ற உட்கருத்துமறிக.

25. தவள வாள் நகை - வெள்ளையான ஒளியுடைய பல். புவனி வாழ் வயிற்ருன் - திருமால். (உலகத்தையுண்டவன்) என்பதாம். புசித்தவா - உண்டவண்ணம். குழந்தை முனிவன் ஆதலால் தவழுவான் என்ருர்.

26 மான் இடத்தினன் - இடது கையில் மானை ஏந்திய சிவன். ஆனி - இடையூறு. உற்றவர், உறுமவர் என, செல்காலமும் நிகழ்காலமும் கூறினமையால், வருங்காலத்தும் அப்படித் தவறு செய்யலாகாதென எச்சரித்தார் என்க. உறுமவர் என்பது - இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்ற மூன்றுக்கும் ஏற்றதாம்.

27. உரவோன் - ஞான விளக்கமுற்ற சடகோபர்.

28. பாயில் - பாய்போல, மாசுணம் - பாம்பு.

29. வேனில் மாரன் - வசந்த காலத்துக்குரிய மன்மதன். வகுளம் - மகிழம் பூ ஏனையர் - ஞானமற்ற மதவாதர்.

30. நால்வாய் - தொங்குகின்றவாய். குஞ்சரம் - யானை. அவன்ருன்என - நம்மாழ்வாரைத் திருமாலேயென்று-

32. சோமுகாசுரன் - ஓரசுரன். அனையவர் - ஒப்பானவர், திருமால் உலகில் அவதரித்தால், சடகோபரும் உலகில் மீண்டும் வருவார்.

33. தானமால் களிறு - மத நீரையுடைய பெரிய யானை. கரடகொம்பன் - இதுவும் நூலாசிரியர் பெயர் பலவற்றுள் ஒன்று.

34. அறுநெறி - சண்மதம், சௌரம், சைவம், சாத்தேயம், வைணவம். காணபத்தியம், கௌமாரம் என்பன. அம்பரமே - பரம்பொருளே திருமால்.

35. "உளன் எனில் உளன்" என்ற ஆழ்வார் பாடல். கதை - புராண வரலாறு. அவை ஒன்றை உயர்த்தி, மற்றொன்றைத் தாழ்த்தியே கூறும். அதை முற்றும் கொண்டு மயங்கலாகாது. என்பதைக் குறிப்பிட்டு "உழல்வார் சொல்" என்றார்.

36. கமலப்பாவை - திருமகள்.

37. இருக்கு - வேதம். வேதம் - திருவாய்மொழி.

39. கலகவாதிகள்-சமயபேதவாதமுடையவர். காரிமாறன்-சடகோபர்.

40. என்று உலாம் - சூரியன் உலவும். ககனம் - தேவலோகம்.

42. தகுவன் - இரணியன். செய்வான்-செய்யும்பொருட்டு.

43. நந்தமர் - நம்மவர். (தொண்டர்கள்)

44. உறுகண் - துன்பம். அது-சமரஞானம்.

45. வார் ஆர் - கச்சணிந்த

46. அசலக்குடை - மலையாகிய குடை. வேளாம் அவன் - மன்மதன்.

47. மூரிப்படத்துஅகி - பெரிய படத்தையுடைய பாம்பு. எயிறு-கூரிய பல்.

48. நந்தன் - நந்தகோபன். சமம்மேல் - ஒப்பும் உயர்வும். கந்தம் - வாசனை.

50. மைந்து - வலிமை. மணிமாசுணம் - ரத்தினத்தைக் கொண்டபாம்பு. ஆதிசேடன், புளியமரமாய், ஆழ்வார் திருநகரியில், தூங்காப் புளியாயிருப்பதும், அதன்கீழ் சடகோபர் நிட்டையிலிருப்பதும் காண்க. அது கண்டும்-இவ்விதப் பெரிய அருட்செயலை உணர்ந்தும். நரன்என்று - நம்போன்ற மனிதரென்று. இளையார்- சிறு மதியினர்.

51. மறை ஆயும் - திருவாய் மொழிப்பொருளை ஆராய்ந் தறியுமவர். புறம்மிக்கு – வெளிப்புறம் வலியதாய். நீடு - திருமால் உயர்ந்துள்ள.

52. கரா - முதலை. புழைக்கை - துவாரமுடைய துதிக்கை. எடா - தூக்கி. ஓர் சொல் - ஆதிமூலமே என்றசொல். மகராலயம் - கடல் (பாற் கடல்)

53. நிலவில் பல்பிளவு - சந்திரனைப் பல பகுதியாகப் பிரித்தது போன்று வளைந்த. சீயம்-சிங்கம். (நர சிங்கம்).

55. வளை - சங்கு. வரைமால் வனம் - மூங்கில் வனம், திருநெல்வேலி. வரை-மூங்கில், தளை - தடை.

56. ஓதிமப்பெடை - பெண் அன்னம்.

58. ஆகுலம் - துன்பம். ஐம்படை - பஞ்சாயுதம் (சங்கு, சக்கரம், வில், வாள், கோதண்டம் என்பன.)

59. ஒன்று, இரண்டு, உரைக்கொணுதது, முத்தியின்கண் உயிரின் நிலைமை பற்றியது அத்துவித உண்மை.

61. வாணன் - வாணுசுரன். தாணயந்தவர்-தாள் நயந் தவர் எனப்பிரிக்க. ஆணம் - அன்பு.

62. ஏற்று வெண் கொடி - வெள்ளை நிற இடபக்கொடி சிவனுடையது.

63. வீடல் - இறப்பது. வேழம் - யானை. தாள்தலைக்கொடு.

64. அரந்தை - பழிமொழி. சீயம்-நரசிங்கம்.

65. ஓரம்-ஒரு பட்சம். வாரம் - அன்பு. புனிதை-கலைமகள். கொண்கன் - பிரமன்.

67. பிறங்கல் - மலை. பெற்றம் - பசுக்கள்.

70 குறும்பர் - நீச மதத்தினர்.

71. வீழ்வன - விரும்புவன.

72. முறி-சீட்டு. எழுகூற்றிருக்கைபாடி-திருவல்லிக்கேணியில் அரங்கேற்றிய தினத்தில் அதற்கு ஈடாக, எழுநூன்பொன் தர ஒப்பி-கடன் சீட்டெழுதி, பார்த்தசாரதி என்று கையொப்பமும் - ஆழ்வார்கள் சான்றிட்டுத் தந்ததான அநுபூதி.

73. அனந்தை - திருவனந்தபுரத்துப் பெருமாள். பல்லவம் - தளிர்.

74. அரசடி......மூர்த்தி. புத்தர். களியும் - புறச் சமயத்தினர் எய்தும் ஆனந்தமும். சரமழை - அம்புமழை. சகடம் - அருச்சுனன் தேர்.

81. தாள் - சிசுபாலனை ஒன்றுபடுத்திய திருவடி. மாவலி-மகாபலிச் சக்கரவர்த்தி அத்திருவடிப் பேற்றை எய்தினன் என்பது.

82. சாகத்தை - ஆட்டுக் கடாவை. கனற்கு நேரே - வேள்வித் தீயினிடம். பித்தரை - யாகப்பயனாக, மேலுலக இன்பம் பெறலாமென்ற ஆவலுடைய மயக்கத்தினரை நினைப்பு-மனத்தின் எண்ண நிறைவு. போதம் - இவற்றில் மயங்காத பேரறிவு.

86. சிசு - பிரகலாதன், நாமக்கனகனை - அச்சமுறத்தக்க கொடிய இரணியனை, வெல்அரி - வென்ற திருமால். ஏவைப்பொரு - அம்பு போன்ற, ஏம - பொருள் வளமிக்க (குருகூர்)

87. மனிதரில் - மனித வடிவமாக, நூல் பழகு உரன் - பூணூல் அணிந்த மார்புள்ள பிரமன்.

88. காரிமகன் - சடகோபர். வேய்ஊர் - திருநெல்வேலி.

90. வரைக்கை - மலை போன்ற தோள். களவு - இறுதியில் வேடன் கணையால் திருமேனி மறைத்ததான பொய் ஆடல் புரிந்த கண்ணன்.

92. அவன் இடம் - திருமால் எழுந்தருளிய தலம். திரை - பாற்கடல்; யாம் ஐயோ எது என்று - அவனது உண்மையான இருப்பிடம் எதுவோ என்று.

93. பெருமாட்டி - இலக்குமி. வடம் தன் நீழல் - கல்ஆல மர நீழல்.

96. மழையில் - மழைபோல, கரி - கசேந்திரனை யானை. பன்னிரு நெறி - அகச்சமயம் ஆறும், புறச் சமயம் ஆறுமாம். சௌரம், சைவம், சாத்தேயம், வைணவம், காணபத்தியம், கௌமாரம் இவை அகச் சமயம். உலகாயதம், சமண், பௌத்தம், தார்க்கீகம், பூர்வ மீமாஞ்சை மாயாவாதம் இவை புறச்சமயம் என்க.

97. புலவு - ஊன், பரம்ஆம்-கடவுள் என்பதாக. ஆடகன் - இரணியன், மதிக்கும்-திருமால் மற்றத் தூண்களிலும் இருக்கலாமோ என்று எண்ணுகின்ற. குலைவது - வருந்துவது. பராங்குசன் - சடகோபர்.

98. ஆர-பொருந்தும்படி. வாரம் - அன்பு.

99 திருவுருவாளன்-இந்நூலாசிரியர் பெயர்களில் ஒன்று. மறம்இல் - வன்மையின்றி (அன்புடன்)

100. அடையலர் - பகைவர்.

101. தெண்ணீர் - தெளிந்தநீர்.

102. நின்நூல் - திருவாய்மொழி. பேறு-திருவருட்பேறு.

103. தனிவீட்டை - முத்திப்பயனை. கற்று - கன்றையுடைய பசு. நெற்றுளில் - நெற்பயிர்க்கு அடியில், (நெல் தாளில்)

104. நடத்தியதா - பலிதமுற்றதாக. பொன்றல் - இறத்தல் ஆழ்வார் திருநகரியில், சடகோபர் அமர்ந்துள்ள புளியமரம். இறப்பு, பிறப்பு தூக்கம் அற்றது. மாலை நேரத்தில் இலைகள் மூடாமலிருக்கும் புளி மரம் இது.

105. புனிற்று இளங்கன்று - மிகச்சிறுகன்று. பிறந்த உடனுள்ளதென அறிக. பொருமும் - பூரிக்கின்ற.

107. தாள்பிடித்து - காலைக்கவ்வி; பேழ்வாய் - பிளந்த வாயையுடைய. தந்திக்கு - யானைக்காக.

108. மேவலன் - பகைவன்.

---

நூலாசிரியர் அருளிய பிற நூல்கள் :

புலவர் புராணம்
தில்லைத் திருவாயிரம்
திருவரங்கத் திருவாயிரம்
பழனித் திருவாயிரம்
திருவாமாத்தூர் தலபுராணம்
அருணகிரிநாதர் புராணம்
தமிழலங்காரம்
தேவகோட்டை முருகன் பிள்ளைத் தமிழ்
சூரியமாலை
வேலலங்காரம் முதலியன.

கிடைக்குமிடம் :

தி. செ. முருகதாச ஐயா
கௌமார மடாலயம்,
திருவாமாத்தூர்,
விழுப்புரம் P. O.